கடலில் முழுகி மறைந்துவிட, ஞானவொளியைத் தரும் பெருவிளக்கான வேதங்கள் ஒழிந்தமைபற்றி உலகமெங்கும் பேரிருள்மூடி நலியாநிற்க, பிரமன்முதலியோ ரனைவரும் கண்கெட்டவர்போல யாதொன்றுஞ்செய்யவறியாமல் திகைத்து வருந்துவது கண்டு திருவுள்ளமிரங்கித் திருமால் ஹயக்கிரீவனாகிக் கடலினுட் புக்கு அவ்வசுரர்களைத் தேடிக் கண்டுபிடித்துக் கொன்று வேதங்களை மீட்டுக் கொணர்ந்து, ஹம்ஸரூபியாய்ப் பிரமனுக்கு உபதேசித்தருளின னென்பதாம். இவ்வரலாறு சிறிதுவேறுபடக் கூறுதலுமுண்டு.

அண்டமுண்டு ஆலிலைகலந்த கதை:—பிரமன்முதலிய சகலதேவர்களுமுட்பட யாவும்அழிந்துபோகின்ற யுகாந்தகாலத்திலே ஸ்ரீமகாவிஷ்ணு அண்டங்களையெல்லாம் தன்வயிற்றில்வைத்து அடக்கிக்கொண்டு சிறுகுழந்தை வடிவமாய் ஆதிசேஷனது அம்சமானதோர் ஆலிலையின்மீது பள்ளிகொண்டு யோகநித்திரைசெய்தருளுகின்றன னென்பதாம்.

கடல்கடைந்த கதை:—முன்னொருகாலத்தில்,இவ்வண்டகோளத்திற்கு அப்புறத்திலுள்ள விஷ்ணுலோகத்துச் சென்று திருமகளைப் புகழ்ந்து பாடி அவளால் ஒருபூமாலை பிரசாதிக்கப்பெற்ற ஒரு வித்தியாதரமகள், மகிழ்ச்சியோடு அம்மாலையைத் தன்கைவீணையில் தரித்துக்கொண்டு பிரமலோக வழியாய் மீண்டுவருகையில், துர்வாசமகாமுனி எதிர்ப்பட்டு அவளை வணங்கித் துதிக்க, அவ்விஞ்சைமங்கை அம்மாலையை அம்முனிவனுக்கு அளித்திட்டாள்; அதன்பெருமையை யுணர்ந்து அதனைச் சிரமேற்கொண்ட அம்முனிவன் ஆனந்தத்தோடு தேவலோகத்திற்கு வந்து,அப்பொழுது, அங்கு வெகு உல்லாசமாக ஐராவதயானையின்மேற் பவனிவந்துகொண்டிருந்த இந்திரனைக் கண்டு அவனுக்கு அம்மாலையைக் கைந்நீட்டிக்கொடுக்க, அவன் அதனை அங்குசத்தால் வாங்கி அந்த யானையின் பிடரியின்மேல் வைத்தவளவில், அம்மதவிலங்கு அதனைத் துதிக்கையாற் பிடித்து இழுத்துக் கீழெறிந்து காலால் மிதித்துத் துவைத்தது; அதுகண்டு முனிவரன் கடுங்கோபங்கொண்டு இந்திரனை நோக்கி 'இவ்வாறு செல்வச்செருக்குற்ற நினது ஐசுவரியங்களெல்லாம் கடலில் ஒளித்துவிடக்கடவன' என்று சபிக்க, உடனே தேவர் செல்வம்யாவும் ஒழிந்தன: ஒழியவே, அசுரர் வந்து பொருது அமரரை வெல்வாராயினர். பின்பு இந்திரன் தேவர்களோடு திருமாலைச் சரணமடைந்து, அப்பிரான் அபயமளித்துக்கட்டளையிட்டபடி, அசுரர்களையுந் துணைக்கொண்டு, மந்தரமலையை மத்தாக நாட்டி,வாசுகியென்னும் மகாநாகத்தைக் கடைகயிறாகப் பூட்டிப் பாற்கடலைக்கடையலாயினர் என்பதாம்.

துருவனது வரலாறு:—சுவாயம்புவமனுவின் மகனான உத்தான பாத மகாராஜனுக்குச் சுநீதி யென்னும் மனைவியினிடத்துப் பிறந்த துருவனென்பவன், ஒருநாள் சிங்காதனத்தில் வீற்றிருந்த தன்தகப்பனுடைய மடியிலே யுட்கார்ந்திருந்த தனது மாற்றாந்தாயான சுருசியின் மகனாகிய உத்தமனென்பவனைப் பார்த்துத் தானும் அப்படி உட்காரவேண்டுமென்று அருகிற்போக, அதுகண்ட சுருசி, செருக்குக்கொண்டு 'என்வயிற்றிலே பிறவாமல் வேறொருத்தி வயிற்றிற் பிறந்த நீ இச்சிங்காசனத்திலே யிருக்க

ரக்ஷணமறது அவிவேகம்; நீ அதற்குத் தகுந்தவ னல்லன்; என்
அதற்குயோக்கியமானவன்' என்று இவனை இழித்துச்சொல்ல, அ
மல் துருவன் சரியென்று தனது தாயார்வீட்டுக்குப் போய் அவ
அநுமதியைப் பெற்றுக்கொண்டு, அப்பட்டணத்திற்குச்சமீபத்திலே
தொரு உபவனத்திலேயிருந்த ஸப்தரிஷிகளைக்கண்டு தண்டனிட்டு
ளால் வாசுதேவ விஷயமான ஸ்ரீதுவாதசாக்ஷர மகாமந்திரம் உபதே
பெற்று, மதுவனத்துக்குப்போய் ஸ்ரீவிஷ்ணுவைத் தன் இருதயகமல
இடைவிடாது தியானித்துக்கொண்டிருக்க, எம்பெருமான் அவனு
னத்திற்குத் திருவுள்ளமுகந்து பிரத்யக்ஷமாய்க் கிருபைசெய்து வரமளி
அவனுடைய அநுக்கிரகத்தினாலே மூன்றுலோகங்களுக்கும்மேற்பட்டதும்,
சகலதாரா கிரகநக்ஷத்திரங்களுக்கும் ஆதாரபூதமும், அவர்களுடைய ஸ்தா
னங்களுக்கெல்லாம் அதியுன்னதமுமான திவ்யஸ்தானத்தை யடைந்து,
தனதுதாயான சுநீதியும் நக்ஷத்திரரூபமாய்த் தனது அருகிலே பிரகாசித்துக்
கொண்டிருக்க, கல்பாந்த பரியந்தம் சுகமாக இருக்கின்றனனென்பதாம்.

மத்ஸ்யாவதார வரலாறு:—முன் ஒரு கல்பத்தின் அந்தத்திற் பிரமதேவன் துயிலுகையில் அவன்முகங்களினின்று வெளிப்பட்டுப் புருஷரூபத்துடன் உலாவிக்கொண்டிருந்த நான்குவேதங்களையும் மகாபலசாலியும் நெடுங்காலந் தவஞ்செய்து பெருவரங்கள்பெற்றவனுமான சோமுகனென்னும் அசுரன் கவர்ந்துகொண்டு பிரளயவெள்ளத்தினுள் மறைந்துசெல்ல, அதனையுணர்ந்து திருமால் ஒருபெருமீனாகத் திருவவதரித்து அப்பெருங்கடலினுட்புக்கு அவ்வசுரனைத் தேடிப் பிடித்துக் கொன்று, அவன்கவர்ந்துசென்ற வேதங்களை மீட்டுக் கொணர்ந்து அவற்றைப் பிரமனுக்குக் கொடுத்தருளினனென்பதாம். இவ்வசுரன்பெயர் சோமகனென்றலும், இவ்வரலாற்றை வேறுவகையாக விரித்துக்கூறுதலு முண்டு.

கூர்மாவதார கதை:—கடல் கடைந்தகாலத்தில் அப்பொழுது, மத்தாகிய மந்தரகிரி கடலினுள்ளே அழுந்திவிட, தேவர்கள் வேண்டுகோளினால் திருமால் பெரியதோர் ஆமைவடிவ மெடுத்து அம்மலையின்கீழேசென்று அதனைத் தனது முதுகின்மீது கொண்டு தாங்கி அம்மலை கடலில் அழுந்திவிடாமற் கடைதற்கு உபயோகமாம்படி அதற்கு ஆதாரமாக எழுந்தருளியிருந்தனனென்பதாம்.

வராகாவதார கதை:—இரணியனது உடன்பிறந்தவனான ஹிரண்யாக்ஷனென்னும் கொடியஅசுரராஜன் தன்வலிமையாற் பூமியைப் பாயாகச்சுருட்டி யெடுத்துக்கொண்டு கடலில் மூழ்கிச் சென்றபோது, தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால் திருமால் மகாவராகரூபமாகத் திருவவதரித்துக் கடலினுட் புக்கு அவ்வசுரனை நாடிக் கண்டு பொருது கொன்று பாதாளலோகத்தைச் சார்ந்திருந்த பூமியைக் கோட்டினாற்குத்தி அங்கு நின்று மெடுத்துக்கொண்டு வந்து பழையபடி விரித்தருளினனென்பதாம்.

நரசிங்காவதார கதை:—தனித்தனி தேவர் மனிதர் விலங்கு முதலிய பிராணிகளாலும் ஆயுதங்களாலும் பகலிலும் இரவிலும் பூமியிலும் வானத்